ஓம்.

குமரசற்குருவின் குலமலரடி துணை.

---

# பொன்னம்பலசிவம்,

## திருவருள் நிலையம்.



# பழநிக்குமரன் பாமாலை.

---

பழநி, திருவருட் சாது சங்க வெளியீடு.




ஓம்
சிவகுகமயம்.
திருச்சிற்றம்பலம்.
வெற்றிவேலுற்றதுணை.

# பழநிக்குமரன் பாமாலை.

திருவருள் நிலையம்,
**பொன்னம்பலசிவம்**
பாடியது.

பழநி, சிவஸ்ரீ சாது சாமியவர்கள்
நன்முயற்சியால் அச்சிடப்பெற்றது.

ஈஸ்வர ஆண்டு புரட்டாசித் திங்கள்
1937 செப்டம்பர்.

ஸ்ரீ ராதாகிருஷ்ண விலாசம் பிரஸ், பழநி.

ஓம்
சிவகுகமயம்.
திருச்சிற்றம்பலம்.
வெற்றிவேலுற்ற துணை.

# பழநிக்குமரன் பாமாலை.

## காப்பு.

பாதவிநாயகர் துதி.

கட்டளைக் கலித்துறை.

வேதவி நோதமாம் வேதாந்த சித்தாந்த வித்தைதவரும்
கோதவி மெஞ்ஞான நிட்டையுந் தானே குலவிபுறும்
போதவிர் கற்பகப் பூஞ்சோலை சூழ்ந்து பொலிபழநிப்
பாதவி நாயகர் பாதாம் புயந்தொழும் பத்தர்கட்கே.

(1) நூல்.

ராகம்-கமாஸ். பல்லவி தாளம்-ஆதி.

1 பழநிக்குமரன் பதமலர் நினைமனமே
தினந் தினமும் -பழநிக்குமரன்

அநுபல்லவி (மகுடம்).

2 அழலொத் திடுமிடி யொழியத் திருவளர் 4
குடகுப் புனல்நிதம் மகிழ்வைத் தரவரு—பழநிக்

3 பத்தர்கள் சித்தர்கள் முத்தர்கள் நித்தமும்
நத்தி வழுத்திடு சுத்த பரபரம—பழநிக்

4 மஞ்சாடு லகர்சள் துஞ்சா நலனுற
எஞ்சா அமிழ்துறழ் பஞ்சாமிர்த மருள்—பழநிக்

5 வேலால் விநோதக் கோலால் மிளிர்கைச்
சீலானு கூலப் பாலாபிஷேகப்—பழநிக்

6 தாயொத் துயிர்களின் மேனற் கருணைசெய்
சாதுப் பரசிவ ஞானத்தவர் திகழ்—பழநிக்

7 சரியைக்காரர்கள் கிரியைத் தூயர்கள்
சிவஸித்தேகர்கள் நிதமொய்த்தே தொழு—பழநிக்

8 தொண்டான பேர்களும் பண்டார வீரருங்
கண்டார்தொழும்பணி மண்டார்வமோடுசெய்—பழநிக்

9 மாகர் வியந்திடு போகரெனுஞ்சிவ
யோக அருந்தவர் நாளும் வதிந்தருள்—பழநிக்

10 உரைப்பவர் கருங்கல் உளத்தினுள் நுழைந்து
விருப்பருள் வழங்கு திருப்புகழ் முழங்கு—பழநிக்

11 நன்னர்க் கதிபெற மன்னற் புவியவர்
சொன்னத்தொடுதரும் அன்னக்கொடைவளர்-பழநிக்

12 சிதமுறு தொண்டர்கள் சேவடி யன்பொடு
நிதநித முப்பல காவடி வந்திடு—பழநிக்

13 கிரிவலம் வருபவர் உரைகுக சிவசிவ
அரகரவெனு மொலி எழுகடலென எழு—பழநிக்

14 பலசம யத்திற் பலவடி வத்திற்
றிகழ்வதை யொத்துப் பலவுரு கட்டுப்—பழநிக்

15 ஆதிச் சிவநெறி யேசத் யமெனவி
பூதித்திருவொளி யாவர்க்கு முதவு—பழநிக்

16 தடங்கொள் நற்பொதி யிலங்க கத்தியர் 6
இடும்ப ரைப்பணி கொளுங் கடப்பணி—பழநிக்

17 சுட்டற் றிடுநிலை யுற்றுத் திருவருள்
பெற்றுப் பரசுக முற்றுக் கொளவளர்—பழநிக்

18 கன்னெஞ் சுருகிடு வண்ணந் திகழ்தரு
பொன்னம் பலசிவம் மன்னன் பொடுபுகழ்—பழநிக்

---

(2) "கைராட்டினமே கதர் பூட்டினமே" என்ற மெட்டு.

1 வேல்முருகா திரு மால்மருகா -சிவ
வேதமந்திர ரூபஅந்தரி பாலசுந்தரா -வள
மேவுதென்பழ னாபுரந்தனில் வாழ்சுதந்திரா -எனை
ஆளுமந்தரா மலை மேவுகந்தரா—வேல்முருகா

2 பாவலனே தமிழ் நாவலனே -அருள்
பாமணங்கமழ் பாலதண்ட பாணிகஞ்சமே -நிகர்
பாதமங்கள மார்சுதந்திர வீடுதஞ்சமே -எனப்
பாடுநெஞ்சமே புற ஓடும்வஞ்சமே—பாவலனே

3 ஏனினமே வரத் தாமதமே -உனை
ஏத்திநிற்கும் பாக்கியத்தைக் கூட்டிவைப்பாயே-அருள்
ஏற்றிநித்தந் தோற்றுவிக்கும் வீட்டிலுய்ப்பாயே-எனக்
கேற்றநற்றாயே சிவன் ஏத்துசிற்சேயே—ஏனினமே

4 யாவருமே உயத் தாவரமே -சிவ
ஞானபொன்னம் பலசிவந்தொழு மோனபுங்கவா-தெய்வ
யானையெங்கண் நிகர்தருங்குற மாதணைந்தவா-என
தோடிலங்கவா மயில் மேலுகந்தவா—யாவருமே

(3)

---

"சுப்ரமண்யரே திருச்சேந்தூர்ச் சுப்ரமண்யரே" என்ற மெட்டு

1 ஆண்டவனே பழநி யாண்டவனே —உனை
வேண்டிநின்றேன் ழூண்டவினை
தாண்டும்வகை யீண்டருள்செய்— ஆண்டவனே 8

2 பார்வதியின்பாலா பக்தர்க்கனுகூலா
சீர்வளருஞ்சீலா செங்கைவடிவேலா —உனைப்
பார்த்து மகிழ் பூத்துவினை
தீர்த்துலகிற் சீர்த்திபெறப்
பாடிவந்தேனே உனைநான்
தேடிவந்தேனே அருள்செய்— ஆண்டவனே

(4) "துலங்குசேம்போன் கோபுரமேன்னும்" என்ற மெட்டு.

1 செகங்கள் யாவும் புகழ்ந் துரைக்குஞ்
செந்தூர்ப் பதியில்வளர் சேவற்கொடி பிடித்தவன்
கிரனுக்காக மாவெற்பினை யிடித்தவன்
சீர்த்தி மிகுத்திடு தீர்த்தர் முதற்றிரி
மூர்த்திகள் மெச்சிடு கீர்த்தி கொளுத்தமன்
சித்ரக்கலாப மயிலோன் —சூரபத்மனைக்
குத்திக்கிழித்த அயிலோன்.

9

2 இசைந்த பாம்புங் கரியுரி போர்வையு
மெழில்நீறே டணிதிகழ் மதியணியீசன் செவிக்
குபதேசன்
எனதுளத்தில் என்றும் இலங்கிடும்வாசன்
எங்கள் குலத்திறை சங்கம் விளக்கிய
கங்கை சுபுத்திர துங்கமிகுக்கிரன்
எல்லாஞ்செய் வல்லசித்தியான் —எவர்களையும்
ஏவல்கொள் சர்வசத்தியான்.

3 படங்கொள் பாம்பின் மிசைதுயி லழகுறு
பஞ்சாயுதங்கைக்கொண்ட பச்சைவண்ணற்குமருகன்
எனதுளத்தை நித்தம் விளக்குமுருகன்
பாட்டை வழுத்திடு சேட்ட முதற்கவி
கேட்ட தளித்திடு மேட்டிமை யுற்றிடு
பன்னிருகைக ளுடையான் —பூரணனெனும்
பாவிகள்நெஞ்சை யடையான்.

4 தடங்கொளும் பழ நித்திருவரை யினில்த் 10
திடங்கொளும்பர துறவியினுருவொடு
சந்தோடமாகநின்றவன் - திருக்கையினில்த்
தண்டாயுதத்தைக் கொண்டவன்
தரிக்க ணந்தன தககண தந்தன
திரிக்க ணந்தன திககண திந்தெனத்
தனிநடமாடு மயிலோன் —சாதுக்களுக்குத்
தகுந்துணையான அயிலோன்.

5 விளங்கு பாதந் தொழுமடி யவர்களை
வேதாந்தப்படியி லேற்றிச்சித்தாந்த வீட்டில்வைப்பவன்
கொடியரைத்தீ நரகிடைவீழ உய்ப்பவன்
வெலற் கரும்பல அசுரர் கடந்தலை
நொடிக் கணந்தரை மிசைவிழ அங்கொரு
வேலாயுதத்தை விட்டவன் —மறைகளெல்லாம்
மேலாகச் சொல்லப்பட்டவன்.

6 கடகட மடமட தடதட வெனவரும் 11
அடரருவிகள்மலிபடர் பொதிகையில்வளர்
கந்தப்பா என்னும்பேரினன்-அடல்
கனிபுயமதிலென சந்தப்பா மன்னுந்தாரினன்-உயிர்
கட்டைப் பொடிசெய்து விட்டுத் திருவருள்
பெற்றுப் பரசுக முற்றுத் திகழவெல்
கண்ணோக்கம் வைத்தருளறுமுகவன் — உயர்
கதிகளில் நிலவுறும்
விண்ணோர்க்கும் பற்றருமொருபகவன்.

7 சிவமக மெனுமொரு          தெருளருள் குருபரன்
நவநவம துரித கவிபுனையடியவர்
சிந்தைக்கண் நின்றவேலவன் -பொரு
திரையெறி மணியொளிர் செந்திற்குகந்த மேலவன் -உயர்
தெய்வக் கரிமகள்          சைவக் குறமகள்
உய்வைப் பெறஅருள்          மெய்வைத் திலகுறு
தென்னாட்டிற்சிறக்குந் தமிழ்த்தெய்வம் -இது
எமதெமதெமதென
எந்நாட்டும் இருக்கும் பொதுத்தெய்வம். 12

8 நலங்கொளும் பொன்          னம்பல சிவமகிழ்
நந்தூர் செந்தூர்ப்பதிவாழ் நாதன் அடிக்கமலங்கள்-வெகு
நயமுள சிரமிசை          நாளும் முடிக்கமலங்கள்
நைந்தோடும் நசை          வெந்தோடும் மிகு
சந்தோடம் மருள்          சிந்தோடும் நிகர்
நற்கரு          ணைக்குமரரே -எனநீர்சொல்லின்
நானிலத்          திற்கமரரே.

(5) தண்டபாணி நடுவெழுத்தலங்காரம்.

பன்னிரு சீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.

ஒருவிதநோ யொருக்கருவி யொருமரத்தேன்
சுக மில்லான் அக்கதேவி
உலகின்று ளிவ்வறுசொல் நடுவெழுத்தா
றெனக் கருள்வாய் உடனும்பன்னீர்
உருவெழுத்தைக் கரத்தமைத்துஞ் சிரத்தமைத்து 13
மிடப்பாகத் துடலிற் சேர்த்தும்
ஒளிரிழையா கத்திரித்தும் மேற்போர்த்தும்
பிறப்பிடமா ஒருகாற் கொண்டும்
பெருமையுடன் விளங்கு முக்கட்
பெருஞ்சோதி பெற்றெடுத்த பெரியவாழ்வே
பேசருமைந் தருநிகர்த்து மாசில்வளம்
பலகொடுத்துப் பிறங்கா நின்ற

தருநிறையும் பழநிவரை யுறைதண்ட
பாணியே சகசா னந்தத்
தடங்கடலே மடங்கலந்தா ரிடம்பொருந்தாக்
கடம்பணிந்த தனிச்செவ் வேளே.

---

குறிப்பு:—

| | | |
|---|---|---|
| ஒருவித நோய் | கபம் | கம் — தலை |
| ஒரு கருவி | அரம் | அம் — கங்கை |
| ஒரு மரத்தேன் | மாமது | மாது — உமை |
| சுகமில்லான் | அசுகி | அகி — பாம்பு |
| அக்கதேவி | தோகல் | தோல் — யானைத்தோல் |
| உலகீன்றாள் | அம்மை | அமை — மூங்கில் |



மேற்காட்டியுள்ள ஆறு சொற்களின் நடுவெழுத்துக் களைக்கூட்டிப் படிக்கப் பரமசுகம் என வருதல் காண்க;

எனவே பரமசுகம் எனக்கருள்வாய் என்று வேண்டிக்கொண்டவாறாயிற்று. அக்கதேவி ஒரு வகைப் புல், அதற்குத் தோகல் என்றும் பெயருண்டு.

பழநிக்குமாரன் பதமலர் துணையே. 15

---



